*Paravidya Series No. 1.*

A STUDY OF

# *Supreme Being*

# பரநிவஸயாராய்ச்சி



BY

## VIDYANANDA

*Price As 3.]* *[Cents 20*

அமுதம். சலேயன் எழுதியது

# முன்னுரை

உலகுக்கு முதற்காரணமாயும் பலவித சிருஷ்டிப்பொருள்களுக்கு ஆதாரமாயுமுள்ள ஓர் பொருளின் இருப்பைப்பற்றி அறிய ஆராய்ச்சி செய்த பற்பல மதவாதிகளும் தத்துவ சாஸ்திரிகளும் அப்பொருளின் இலக்ஷணத்தையும் சுபாவத்தையும் கூறுமிடத்து ஒருவருக்கொருவர் தம் கருத்தை வெளிப்படுத்தும் பாஷையின் வித்தியாசத்தாலோ அல்லது சரியான ஆராய்ச்சியின்மையாலோ பல வேறு அபிப்பிராயப் பேதப்பட்டிருப்பதாகக் காணப்படுகிறார்கள். என்றாலும் அப்படி ஒரு முதற் பொருள் உண்டு என்பதை மாத்திரம் எல்லாரும் ஒரே அபிப்பிராயத்துடன் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆதலின் அப்பொருளை யார் எப்பெயரிட்டு விவகரித்தாலும் எவ்விதத்தால் வணங்கினாலும் சரியே. அது குறித்து ஒருவர்க்கொருவர் எதுவுங் கூற நியாயமில்லை. ஆனால், மதவாதிகளின் கருத்துப்படி

அப்பொருளின் சுகத்தை யனுபவிக்கவோ, அல்லது தத்துவ சாஸ்திரிகளின் கருத்துப்படி அப்பொருளின் இருப்பையும் உண்மைச் சுபாவத்தையும் அறியவோ ஒருவன் விரும்புவானுனல் அவன் எவ்வித மார்க்கத்தை அனுசரித்து எவ்விதப் பழக்கத்திலிருந்தால் எளிதில் அப்பொருளின் உண்மை நிலையை உள்ளபடி உணர்ந்து அனுபவிக்க முடியும் என்பதை அறியவேண்டுவதே இச்சிறு புத்தகத்தின் முக்கிய கருத்தாயிருக்கிறது.

நாம் ஒரு பொருளின் உண்மை நிலையை அறிய விரும்பினுல் நம்மனதுக்கும், புலன்களுக்கும் பிரத்தியக்ஷமாகவும் அனுபவமாகவுமிருக்கிற அப்பொருளின் நிலையிலிருந்து படிப்படியாக மேலே ஆராய்ச்சி செய்துகொண்டு போனுல் மாத்திரந்தான் அப்பொருள் நம்வாழ்வின் அனுபவத்தில் பிரத்தியக்ஷத்துக்கு வந்த கிரமத்தையும் அதன் மூல காரணத்தையும், உண்மைநிலையையும் எளிதில் அனுபவமாக உணரலாம், எப்

போதும் காரியம் பிரத்தியக்ஷமாகவும் காரணம் அப்பிரத்தியக்ஷமாகவுமிருப்பதால் பொருளின் பிரத்தியக்ஷத் தோற்றமாகிய காரிய நிலையிலிருந்தே அப்பிரத்தியக்ஷமாகிய அதன் காரணநிலைக்குச் செல்வது ஒருவன் தன் ஆராய்ச்சிக்கிரமத்தில் அனுசரிக்கவேண்டிய ஒரு நல்ல விதியாகவிருக்கிறது. இவ்விதிக்கிரமத்தை விடுத்து மூட நம்பிக்கையினாலாவது அல்லது கேள்விப்பட்டதினாலாவது ஏதோ ஒன்றைத் தன் மனதில் பாவித்துக்கொண்டு அப்பாவனைப் பொருளையே ஆதாரமாகக்கொண்டு செல்லும் ஆராய்ச்சியானது எப்போதும் தவறுதலடைவது திண்ணம்.

கடவுள் மனித ரூபமாயுள்ளவரென்றும் அவர், குயவன் மண் பாண்டங்களைச் செய்கிறது போல, உலகையும் அதிலுள்ள பொருள்களையும் சிருஷ்டித்திருக்கிறார் என்றும் வீண்பாவனையால் கடவுளுக்கு மனித ரூபத்தையும் மனித சுபாவத்தையும் கற்பித்துப் பேசிய சில மதஸ்தர்களுடைய கொள்கைகளைத்தும், நாளடைவில் தத்

துவ ஆராய்ச்சி தலையெடுக்க ஆரம்பித்த காலத்தில் எவ்வாறு அம்மூடக் கொள்கைகளனைத்தும் தத்துவ வித்தையின் முன் எதிர் நிற்கமாட்டாமல் பறந்துபோயினவென்பதை அறிஞர்கள் எவரும் அறிந்திருக்கிறார்கள்.

அனுபவத்திற்குப் பிரத்தியக்ஷமாகவிருக்கிற பொருளின் காரியத்தைக்கொண்டே அனுபவத்திற்கு அப்பாற்பட்டிருக்கிற அதன் மூல காரணத்தை நிதானிக்க வேண்டுமெனும் விதியை உணர்ந்த எவனும் கடவுளுக்கு மனித ரூபத்தையும் மனித சுபாவத்தையும் கற்பிக்கமாட்டான். உலகில் பிரத்தியக்ஷமாயிருக்கிற பொருள்களையும் அவைகளின் காரியங்களையும் சிறிதும் ஆராய்ச்சி செய்யாது விடுத்து மூட நம்பிக்கையாலும் வீண் மனோபாவனையாலும் யுக்திக்கும் அனுபவத்திற்கும் சிறிதும் பொருத்தமற்ற ஏதோ ஒன்றைத் தனக்குள் நிக்ஷேபித்துக்கொண்டு ஒருவன் தன் ஆத்ம வாழ்வையாவது அல்லது உலக வாழ்வையாவது ஒழுங்குப்

படுத்த முயற்சிப்பானுனல் அவன் அதினின்று எப்போதும் தவருதலடைந்தே தீருவான் என்பது திண்ணம்.

இது குறித்தே மதவிஷயங்களிதிலும் மூடத்தனமாய்த் தலையிட்டுக்கொள்ளாத பௌத்தரும் தம் சீடர்களை நோக்கி, " ஒரு விஷயத்தைக் கேள்விப்பட்டதினுலேயே நல்லதென்ருவது கெட்டதென்ருவது அதை நம்பவேண்டாம், உண்மையில்இல்லாமலிருந்தால் எழுதிவைத்திருப்பார்களாஎன்று எண்ணி அதனுலேயேஉண்மையென்று தீர்மானிக்கவேண்டாம், அநேக இடங்களில் வெகுகாலமாக வழங்கிப் பாரம்பரையாக வந்த ஐதீகமென்று அதனுலேயே அதில் நம்பிக்கைவைக்கவேண்டாம், ஒரு விஷயத்தை அநேகர் நம்புகின்ருர்களே என்று அதனுலேயே அதை நம்பவேண்டாம், அநேகர் ஒன்றை நம்புவதால் அதனுலேயே அதை உண்மையென்று நம்பவேண்டாம், ஒரு மஹானுல் செய்யப்பட்ட சாஸ்திரதிலுள்ள விஷயமென்று எடுத்துக் காட்டுவ

தினுலேயே அதை நம்பவேண்டாம், ஆச்சரியமா யிருப்பதால் தேவனுலோ அல்லது அற்புதமான ஒருவனுலோ செய்யப்பட்டதென்று நீ கற்பனை கொண்ட தினுலேயே நம்பவேண்டாம், பெரியோர்களாலும் குருமார்களாலும் சொல்லப்பட்டவையென்று அதனுலேயே நம்பவேண்டாம், உத்தேசத்துக்கு வந்த எல்லா விஷயங்களையும் நம்பவேண்டாம், ஒவ்வொன்றையும் தெளிவாக ஆராய்ச்சி செய்து அது அனுபவத்தில் சகலருக்கும் நன்மையைத் தரக்கூடியதென்று உணர்வாயாகில் அப்பொழுதுமாத்திரம் அதை ஒத்துக் கொள், பிறகு அதன்படியே நட" எனக் கூறியுள்ளார். உலகத்தில் பல மதங்களையும் தத்துவங்களையும் போதித்துவந்த ஒவ்வொருவரும் தான் சொல்வதே உண்மையென்றும் அதையே நீங்கள் நம்புங்களென்றும் தன்னைப் பின்பற்றிய சிடர்களை நோக்கிக் கூறினுர்களே ஒழிய, பௌத்தரைப்போல் இவ்வளவு விவேகமாகவும் துணிவாகவும் தன்னைப் பின்பற்றிய சிடர்களுக்கு இவர்

களில் எவரும் போதிக்கவேயில்லை. ஆதலின் ஏதேனும் ஒரு உண்மையை ஆராய்ச்சி செய்ய ஆரம்பிக்கும் ஒருவன் பௌத்தர் கூறிய இம் மொழிகளை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, தான் எடுத்துக்கொண்ட ஆராய்ச்சியின்மேல் செல்லுவானேயானல் அவன் மற்றைய ஆராய்ச்சிக்காரர்களைவிட உண்மையை அறிவதில் சிறந்தவனுகவே ஆவான் என்பது திண்ணம்.

இதுபற்றியே ஆராய்ச்சியிற் சிறந்த அறிஞர்கள் பலரும் தாங்கள் வீண் பாவனையாலும் கேள்வியாலும் அல்லது வெறும் புத்தகப் படிப்பினுலும் எதையும் தீர்மானிக்காது தங்கள் அனுபவத்தில் பிரத்தியக்ஷமாகக் கண்ட பொருள்களின் இயற்கை நிலையிலிருந்தே ஆராய்ச்சி செய்து மேல் சென்று தாங்களறிந்த உண்மைகளை வெளிப்படுத்தியிருக்கிறூர்கள். இத்தகைய உண்மைகள்தான் தற்காலத்து அறிஞர்களால் உண்மையென்று அங்கீகரிக்கப்பெற்று அவர்களுடை

ய எவ்வித ஆராய்ச்சிக்கும் ஆதாரமாக நின்று விளங்குவனவாயிருக்கின்றன.

இவ்வித ஆராய்ச்சியினின்று மேற்சென்று உண்மையை அறிவதற்கு இரண்டு விதமான பொருள்கள் நமக்குப் பிரத்தியக்ஷமாகவிருக்கின்றன. ஒன்று உலகப்பொருள்கள், மற்றொன்று அவ்வுலகப் பொருள்களையறியும் மனிதன். இவ்விரண்டு பொருள்களை ஆதாரமாகக்கொண்டே எவ்வித ஆராய்ச்சியும் மேல் செல்லவேண்டியதாயிருக்கிறது. இவ்விரண்டில் சிலர் உலகப் பொருள்களை ஆதாரமாகக்கொண்டும் சிலர் மனிதனை ஆதாரமாகக்கொண்டும் ஆராய்ச்சிசெய்து அவரவர்கள் கண்ட உண்மையை வெளியிட்டிருக்கிறார்கள். உண்மையானது இன்ன ஜாதியார் இன்ன தேசத்தார் இன்ன வகுப்பினர் எனும் பேதமில்லாது மனிதராய்ப் பிறந்த எவரும் ஆராய்ச்சி செய்வதற்கும் அடைவதற்கும் பொதுவாயுள்ள ஓர் விஷயம் ஆகையால் மேல்

நாட்டு தத்துவ சாஸ்திரிகளும் இவ்வித ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். அவர்கள் கண்டுபிடித்துக் கூறிய உண்மைகளை நம்பி அவைகளைப் பின்பற்றியவர்களில் அநேக வெள்ளைக்காரர்களும் இந்தியர்களும் உண்டு. அதுபோலவே கீழ்நாட்டாராகிய இந்துக்கள், ஆராய்ச்சித்தறிந்து வெளிப்படுத்திய உண்மைகளை நம்பி அவைகளைப்பின்பற்றியவர்களில் அநேக இந்தியர்களும் வெள்ளைக்காரர்களும் உண்டு. இவ்விருதிரத்தாரிலும் உள்ள சிலர் ஏதாவது ஒரே வழியைப் பின்பற்றிச்சென்று அதிற் கூறிய உண்மைகளைமட்டும் அறிந்துகொண்டு மற்றவர்கள செல்லும் வழியைச் சிறிதும் அறியாமலே அவர்களுடைய உண்மைகளைப் பொய்யாக்க முயலுவதுமுண்டு. அன்றியும் அவர்கள் தாங்கள் சென்ற வழியில்கிடைத்த உண்மைகளில் திருப்தியடைந்துகொண்டிருப்பதோடு, உண்மைக்கும் மனச்சாக்ஷிக்கும் அனுபவத்திற்கும் விரோதமான சில விஷயங்கள் அவைகளில் கூறியிருந்தாலும் தாங்களதில்

அடைந்திருக்கும் உண்மையில் வைத்திருக்கும் நல்நம்பிக்கையால் அத்தீயவைகளையும் மூடத்தனமாய் நம்பிக்கொண்டு மற்றவர்களையும் அவைகளை நம்பும்படி விரும்புகிறார்கள். எப்போதும் ஒன்றை ஆராய்ச்சி செய்வதில் தன் சொந்த புத்தியை இழந்து ஒரே சார்பாகச் செல்லும் மனிதவியற்கை இப்படித்தானிருக்கும். இவ்வித குற்றத்தினின்று விலகினவனே தத்துவ ஆராய்ச்சிசெய்து உண்மையை அடைய அருகனாவான்.

ஒருவனுடைய ஆராய்ச்சியின் முடிவில் ஐக்கியமட்டும் உண்டாகுமேயானால் அது எவ்வித மார்க்கமாயினும் குற்றமில்லை. இவ்வைக்கியத்தையறிந்து அனுபவிக்கவேண்டுமெனும் விருப்பமுடைய ஒருவன் தன் ஆராட்ச்சியில்கிடைத்த உண்மைக்குறிய விதிகளோடு தன் வாழ்வை ஒழுங்குப்படுத்திப் பழகி வராவிட்டால் அவன் தன்னுடைய ஆராய்ச்சியின் பலனாக எவ்வித சுகத்தையும் அனுபவிக்கப்போகிறதேயில்லை. உலகிலுள்ள பல வேறு மதங்களும் தத்துவக் கூட்

டங்களும் அவைகளின் வெளித்தோற்றங்களா கிய சின்னங்களாலும் சடங்காச்சாரங்களாலும் ஒன்றற்கொன்று மாறுபட்டுக் காணப்பட்டா லும் அவைகளின் உள்ளனுபவங்களாலும் அவை களுக்குறிய பழக்க ஒழுக்க முறைகளாலும் ஏற க்குறைய எல்லாம் ஒத்திருப்பதாகவே காணப் படுகின்றன. இவ்வைக்கிய உணர்வானது, ஒரு வன் தான் பின்பற்றிச் செல்லும் மார்க்கத்தின் உண்மை விதிகளை தன் வாழ்வில் அனுபவத்துக் குக் கொண்டுவந்தாலன்றி வேறெவ்விதத்தா னும் அடையப்படுவதன்று.

இவ்வைக்கியத்தை நாடியே பல வேறு மத ங்களும் தத்துவ வித்தைகளும் உண்டாயிருக்கி ன்றன. பலவாகக் காணப்படும் உலகப் பொரு ள்களுக்கும், மனிதன் முதலாய ஜீவப்பிராணிக ளுக்கும், மற்றும் பிரகிருதியிலுள்ள பல்லாயிர பேதசக்திகளுக்கும், இடையில் இரண்டற்ற ஏக நிலையான ஐக்கியத்தை அனுபவிப்பதே கடவுள் தரிசனம் என்பாம். இந்நிலை கடவுள் மனிதன்

என்ற பேதமற்றது. எல்லாம் ஏக உருவே. இதை அனுபவத்தாலுணர்ந்த ஒருவனுக்கு ஜீவ பேதமாவது, ஜாதி பேதமாவது, தேசபேதமாவது, காலபேதமாவது, கிரியாபேதமாவது, நிலைமை பேதமாவது கொஞ்சமும் இல்லை. இவ்வைக்கிய உணர்வு ஒன்றே ஒவ்வோரிடத்திலும் உண்டாகவேண்டியிருக்கிறது. இது எப்போதும் சத்தியமாகவும், சர்வசக்தியாகவும், சாந்தமாகவும் உள்ளது. இது மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் சொந்தமாயினும் இவ்வாழ்விலேயே அடையச் சாத்தியமாயினும் அதை நாம் முற்றிலும் மறந்து வருந்துகின்றோம். இதை நினைப்பூட்டும்பொருட்டே இப்புத்தகத்தை மனிதராய்ப் பிறந்த எல்லாருக்கும் அர்ப்பணித்து வெளியிடப்பட்டது.

வித்யானந்தா.

# தற்பரம்.

உலகில் மனிதனுல் பார்க்கப்படும் எல்லாப் பொருள்களும் ஒரு மாறுதல் விதிக்கு உட்பட்டனவாய் இடைவிடாது மாறிக்கொண்டிருக்கக் காண்கிறேம். இயற்கையாக ஒன்று மாறுதலடையும்போது அதன் உருவம் மாருதிருக்க முடியாது. ஆதலால் உலகப் பொருள்கள் ஒவ்வொன்றும் தொடர்ச்சியாக மாறிக்கொண்டு வருவதால் அம்மாறுதலின் ஒவ்வொரு நிலமையிலும் வெவ்வேறு உருவ பேதத்தையடைகின்றது. எப்படி சமுத்திர ஜலமானது சூரிய வெப்பத்தால் காயப்பெற்று சூக்ஷ்மமான ஆவிரூபமாக மாறி ஆகாயத்திற் சென்று பிறகு அங்கிருந்து வாயுவின் குளிர்ச்சியால் ஸ்தூல ரூபமான மழை ஜலமாகவும், சிலசமயங்களிற் பனிக்கட்டி ரூபமாகவும், தடித்துக் காணப்படுகிறதோ அதுபோலவே உலகிலுள்ள பொருள்களனைத்தும் சூக்ஷ்மமாகவும் ஸ்தூலமாகவும் மாறக்கூடியவைகளாயிருக்கின்றன.

இப்படி மாறுகிற ஏதாவது ஒரு பொருள் சில சமயங்களில் நம்மால் பார்க்க முடியாமல் அது ஸ்தூலமாகவோ அல்லது சூக்ஷ்மமாகவோ ஏதாவது வேறு ஒரு உருவத்தை யடைந்துவிட்டால், நாம் அப்பொருளை முற்றிலும் நாசமாய் இல்லாமற் போய்விட்டதென்கிறோம். ஆனால் உண்மையில் அப்படியல்ல. எப்படி சமுத்திர ஜலமானது சூக்ஷ்மமான ஆவியாகவும் ஸ்தூலமான பனிக்கட்டியாகவும் மாறினவிடத்து அது இல்லாமற் போகவில்லையோ அப்படியே உலகிலுள்ள எப்பொருளும் எக்காலத்தும் இல்லாமல் போவதில்லை. இவ்வித மாறுதலில் பொருள்கள் எவ்வளவுக்கு எவ்வளவு ஸ்தூலரூபத்தை யடைகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு பலவிதமாகப் பெருகிப்பல வேறுவித்தியாசப்பட்ட உருவங்களாகக் காணப்படுகின்றன. அதுபோலவே பொருள்கள் ஸ்தூல நிலமையிலிருந்து சூக்ஷ்மமாக மாறிக்கொண்டு போகும்பொழுது எவ்வளவுக்கெவ்வளவு சூக்ஷ்மத்தை அடைகின்றனவோ

அவ்வளவுக்கவ்வளவு ஒன்றிலொன்ருக ஐக்கியமாகிக் கடைசியில் ஒரே ஏகப்பொருளாக ஆய்விடுகின்றன. இதை எல்லாத் தத்துவ சாஸ்திரிகளும் ஒப்புக்கொள்ளுகிருர்கள். இந்த ஏகமாகிய பொருள்தான் உலகில் காணப்படும் பல்லாயிர சக்திகளுக்கும் பலவிதரூபங்களுக்கும் ஆதாரமாயுள்ளது. இப்பொருள் இடைவிடாது மாறும் சுபாவத்தோடு கூடியது. ஒவ்வொன்றையும் நவநவமாகக் காட்டக்கூடியது. இது ஸ்தூலப் பொருளாக மாறுங்காலத்து நாம் அதை நம் கண் முதலாய இந்திரியங்களால் அறிகிருேம். அதுவே சூக்ஷ்மமாக மாறிக்கொண்டு போகும் பொழுது கண் முதலாய இந்திரியங்களால் பார்க்க முடியாமலும் மனதினுல் நினைக்க முடியாமலும் அதி சூக்ஷ்மமாக மாறி மறைந்து ஒன்றுமில்லாததுபோல் ஒரு பெரும் இருளாகக் காணப்படுகின்றது.

இவ்விடத்தில் சையன்ஸ் எனும் எவ்வித கலை ஞானமும் எட்டுகிறதில்லை. எவ்வித கலை

ஞானமும் உதவியற்றதாக ஆய்விடுகிறது. எவ்வளவு சக்திபொருந்திய எவ்வித திருஷ்டிக்கண்ணாடியும் அதைக் கிரஹித்து மனிதனுக்குக் காட்டமுடியாமல் முழுதும் தன் சக்தி யிழந்ததாக ஆய்விடுகின்றது. வெள்ளைக்காரருடைய சையன்ஸ் எனும் கலை ஞானம் கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாயிருக்கிற பொருள்கள்வரையில் மாத்திரம் உபயோகப்படுகின்றனவே யல்லாமல் அதற்கு மேற்பட்ட சூக்ஷ்ம நிலையிலுள்ள விஷயங்களை அறிய உதவுகின்றதில்லை.

உலகப் பொருள்களை ஆராய்ச்சிக்க முயன்ற சிறந்த மேல் நாட்டுத் தத்துவ சாஸ்திரிகளில் ஒருவரும், தற்காலத்து ஆராய்ச்சிக்காரரால் நன்கு மதிக்கப்பெற்று ஆதாரமாகக்கொள்ளப்பெற்றவருமான ஹெர்பர்ட் ஸ்பென்ஸரும் (Herbert Spencer) நெடுங்காலம் தான்செய்து வந்த ஆராய்ச்சியின் முடிவில் இவ்விடத்திற்கு

வந்து இப்பிரதானப் பொருளின் இயல்பை இத்தன்மைத்து என அறிய ஆரம்பித்தபோது அவர் இதுவரையில் கற்றறிந்த எல்லாவிதக் கலை ஞானங்களும் ஆராய்ச்சிக்குதவிய கருவிகளும் ஆகிய எல்லாம் பிரகாசமற்று மழுங்கிப் போயினதாயும், தன் புத்தியும் இருளடைந்து போனதாயும் கண்டு கடைசியாக தன் ஆராய்ச்சியின் அபிப்பிராய முடிவாக அவர், இம்மூல காரணப் பொருளை, அறிய முடியாததென்றும் அது அறியப்படாததென்றும் அவ்விடத்தில் தனக்கு ஒன்றுந் தெரியவில்லையென்றும் இது ஒரு பெரும் இருளாயிருக்கிறதென்றும் கூறிவிட்டார்.

அந்தோ! இவரைப்பின்பற்றியிருந்த ஆயிரக்கணக்கான பேர்கள் இவ்வித பதிலைத்தானு கடைசிவரையில் இவரிடமிருந்து எதிர்பார்த்திருந்தார்கள்? ஜடப்பொருளை ஆராய்ச்சி செய்து சென்றவர்களின் முடிவு இவ்வளவுதான். அவர்கள் இதற்குமேல் எதையும் அறிந்ததாகக் காண

ப்படவில்லை. பூர்வீக இந்தியர்களுள் சிறப்புற் றுவிளங்கிய தத்துவஞானமுடையவர்கள் இதே விஷயத்தை மேல்நாட்டு தத்துவ சாஸ்திரிகள் ஆராய்வதற்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முன் னமே ஆராய்ச்சித் தறிந்திருக்கிறார்கள். அவர் களுள் சாங்கியர்கள் பிரகிருதி என்றும் வேதா ந்திகள் மாயை என்றும் இம்மூலப் பொருளுக் குப் பெயரிட்டிருக்கிறார்கள். அவர்கள் மேல் நாட்டு தத்துவ சாஸ்திரிகளைப்போல் இம்மட் டோடுநின்றுவிடாமல் இதற்கும் மேலேசென்று ஆராய்ச்சி செய்து அவர்கள் க்ண்டு அனுபவித்த உண்மைகளை வெளியிட்டிருக்கிறார்கள்.

மேல்நாட்டுப் பிரகிருதி வாதிகள் காணப்ப டும் உலகப் பொருளை மட்டும் ஆராய்ச்சித்தார் களே ஒழிய காண்கிற மனிதனைப்பற்றிய உண் மைகளைச் சிறிதும் ஆராய்ச்சிக்கவில்லை. அதை முற்றிலும் மறந்தே தங்கள் ஆராய்ச்சியை முடி த்துவிட்டார்கள். அதினால்தான் ஹெர்பெர்ட் ஸ்பென்ஸராதியோருடைய ஆராய்ச்சி பூரண

மானதல்லவென்று கூறவேண்டி யிருக்கிறது. காணப்படுபொருள் காணும்பொருள் இரண்டையும் ஆராய்ச்சியானது பொருந்தி நிற்க ஒன்றைவிடுத்து ஒன்றை ஆராய்வது எப்படிப் பூரணமானதாகும்? ஆனதினால் அதை அரைகுறையான ஆராய்ச்சியெனவே கூறவேண்டி யிருக்கிறது.

ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் தமது ஆராய்ச்சியின் முடிவில் அம்மூலப் பொருளைப்பற்றி தனக்கு ஒன்றுந் தெரியவில்லை எனக்கூறினர். அவர் "ஒன்றுந் தெரியவில்லை" யென்ற நிலைமையை சாக்ஷியாகவிருந்து அறிந்த தன்னை முழுதும் மறந்துவிட்டார். தான் என்பது அந்நிலமையி லும் சுயமாகவே பிரகாசித்திருந்திருக்கிறது. அப்படி ஒன்றுந் தெரியவில்லை என்ற நிலையைச் சாக்ஷியாகவறிந்த தன்னிலையுணர்வு அவருக்குப் பிறக்காது போனதே அவர் ஆராய்ச்சி பூரணமாகாததற்குக் காரணம். அவர், இவையனைத்தையும் காண்பானாய் நின்ற தம்மை முற்றிலும் மறந்துவிட்டார்.

இதை விளக்க ஒரு சிறு கதையுண்டு. பத்து மனிதர்கள் ஒன்றுசேர்ந்து ஓர் ஊருக்குப் பிரயாணம் சென்றார்கள். அப்பொழுது வழியில் ஒரு நதியைக் கடக்கவேண்டி நேரிட்டது. நாமனைவரும் ஒருவர்க்கொருவர் கையைப் பற்றிக்கொண்டு நதியிலிறங்கிச் செல்வோமானால் ஒருவருக்கும் யாதொரு அபாயமுமில்லாமல் நதியைச் சுலபமாகக் கடந்துவிடலாம் என எல்லோரும் தீர்மானித்துக்கொண்டு அவ்வாறே நதியைக் கடந்து அவர்களில் ஒருவருக்கும் யாதொரு கெடுதலுமில்லாமல் அக்கரையை அடைந்தார்கள். அதன்பிறகு அவர்களுக்குள் நாம் பத்துப் பேர்களும் சரியாக இருக்கிறோமா? நதியில் யாரேனும் தவறியிருந்தாலு மிருக்கலாமே? அதை எண்ணிப் பார்த்து விடவேண்டும் எனும் சந்தேகம் பிறந்தது. பிறகு அதன்படியே அவர்களுள் ஒவ்வொருவரும் தனித்தனியே மற்றவர்களை எண்ண ஆரம்பித்தார்கள். இப்படி ஒவ்

வொருவராக மாறி மாறி எண்ண ஆரம்பித்த பத்துப்பேர்களும் எண்ணின தன்னைவிட்டே மற்றவர்களை எண்ணினுர்களாதலால் எண்ணிக்கை முடிவில் இப்பத்துப்பேர்களும் ஒன்பதுபேர்களைத்தான் கண்டார்களே ஒழிய ஒருவனைக் காணவேயில்லை. என்ன செய்வார்கள் பாவம்? யாரோ ஒருவனை நதியில் இழந்துவிட்டோமே அவன் இன்னுனென்று தெரியவில்லையே எனப் பெருந்துக்கப்பட்டார்கள். அப்படிக் காணுமல் போனவன் யார் என்று கண்டுபிடிக்க ஒவ்வொருவரும் தங்களுக்குத் தெரிந்த விதத்திலெல்லாம் எவ்வளவு பிரயத்தனங்கள் செய்தும் முடியாமற் போயிற்று. இவ்வாறு அவர்கள் செய்த பெரிய முயற்சியின் முடிவாக ஒருவனைக்காணுமென்பதைமட்டும் நிசுஷயமாகக் கண்டுபிடித்தார்கள். பிறகு எல்லோரும் அதை 'நினைத்து வருந்திக்கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் அவ்வழியே சென்றுகொண்டிருந்த வழிப்போக்கனெருவன் இவர்களை ஏதோ

துக்கத்திலிருப்பதாகக் கண்டு அவர்களைப்பார்த்து நண்பர்களே! நீங்களனைவரும் ஏதோ வியாகூலத்துடனிருப்பதாகக் காணப்படுகிறது அப்படி உங்களுக்கு நேர்ந்ததென்ன என்று வினவ அவர்கள் நடந்ததைச் சொன்னார்கள். அதைக் கேட்ட வழிப்போக்கன் அவர்களை எண்ணிப் பார்க்கப் பத்துப்பேர்களும் சரியாக இருப்பதைக் கண்டு அவர்களுடைய புத்தி விசாலத்திற்காக நகைப்பும் ஆச்சரியமும் அடைந்து அவர்களை வரிசையாக நிருத்தி எண்ணும்படி சொல்லிப் பிறகு எண்ணினவனையும் சேர்த்துக்கொள்ளும்படி சொல்லப் பிறகு ஒவ்வொருவரும் தனித்தனியே எண்ண ஆரம்பித்து எண்ணின தன்னையும் சேர்த்துச் சரியாக ஒருவனும்குறையாமல் பத்துப் பேர்களும் சரியாக விருக்கக்கண்டு தங்கள் புத்திக் குறையை நினைந்து வருத்தமும் உண்மையை யறிந்ததற்காகத் திருப்தியுமடைந்து சென்றார்கள்.

காணப்படும் ஜடப்பொருளைமட்டும் ஆராய்

ச்சி செய்த தத்துவ சாஸ்திரிகளுடைய கதியும் இதேதான். ஆகையால் காணப்படும் ஜடப் பொருளை அறியும் மனிதனை ஆராய்ச்சிப்போம். இதிலிருந்துதான் மற்றயபாதி ஆராய்ச்சியானது ஆரம்பிக்கப்படுகிறது. மனிதனுடைய தத்து வங்களை ஒவ்வொருவகைத் தத்துவக் கூட்டத் தாரும் தங்களுக்கு வேண்டியவாறு பதினறாக வும் முப்பத்தாறாகவும் தொண்ணூற்றாறாகவும் பிரித்திருக்கிறார்கள். ஆனால் நமது ஆராய்ச்சி க்கு இவைகளனைத்தையும் சுருக்கி மூன்றே தத் துவங்களாக வைத்துக்கொள்வதே போதுமான தாகக் காணப்படுகிறது.

முதலாவது, சரீரத்துடன் கூடியிருக்கிற கண் காது மூக்கு வாய், ஆகிய அறியும் கருவி கள். இரண்டாவது, இக்கருவிகள் மூலமாகக் கண்டவற்றை நினைக்கும் மனது, மூன்றாவது, அப்படித் தன்னுள் நினைத்தவற்றை அறியும் அறிவு. இம்மூன்றே மனிதனிடத்துள்ள முக் கிய தத்துவங்கள். எக்கூட்டத்தார் எத்தனையா

கப் பிரித்தாலும் அவையனைத்தும் இம்மூன்றி னுள்ளேயடங்கும். இதில் கண் காது முதலிய புறக்கருவிகள் எதுவும் மனதின் சம்பந்தமில்லா மல் எதையும் அறியமுடியாது. ஒருவன் எதேனும் ஒருவிஷயத்தைக் குறித்து ஆழ்ந்த சிந்தனையிலமர்ந்திருக்கும்போது ஒருவர் கூப்பி ட்டாலும் அல்லது முன்வந்து நின்றாலும் கண்களும் காதுகளும் எவ்வளவு நல்ல நிலமையி லிருந்தும் விஷயம் அறியப்படாமல்போகின்றது. என்ன காரணம்? மனது புறக் கருவிகளாகிய கண் காதுகளோடு சம்பந்தப்படாமலிருந்தது வே விஷயம் அறியப்படாமற் போனதற்குக் காரணம். மனது புறக்கருவிகளோடு சம்பந் தப்படாதிருக்கிறவரையில் புறக்கருவிகள் ஒன் றையும் அறிய முடியாது.

அதுபோலவே மனதினிடத்து நிகழுக் கூடிய எண்ணங்களைச் சாக்ஷியாக அறிகிற அறி வெனும் தத்துவம் எல்லாவற்றிற்கும் மேலான தாக விளங்குகிறது. மனிதன் இவ்வறிவை யறிந்

தாலும் அறியாவிட்டாலும் அது எப்போதும் இவனிடத்து நிகழும் ஒவ்வொன்றையும் இடைவிடாது அறிந்துகொண்டேயிருக்கிறது. இது எப்போதும் மாருது அசைவற்றுச் சாக்ஷியாகவிருக்கிறது. மாறும் சுபாவத்தோடு கூடிய மனதில் நிகழும் செய்கைகளனைத்தையும் அறிந்துகொண்டேயிருக்கிறது. மனம் அதை அறிகிறதில்லை. மனம் அதையறிய எண்ணும்போது மனம் அவ்வறிவின் சொரூபமாகவே தானும் ஆய்க்கொள்ளுகிறது. அதாவது மனமே இல்லாமற் போய்விடுகிறது என்பது கருத்து. மனம் அதை எண்ணுதிருக்கிறவரையில் உலக ரூபமாகவே தானும் இருந்துகொண்டிருக்கிறது.

மனிதன் நினைக்கும் சக்தியைப் பழகின காலமுதல் தன் வாழ்நாட்களில் இடைவிடாது தனக்குப் புறம்பேயுள்ள உலகப் பொருள்களையும் அவைகளின் விஷயங்களையும் நினைத்துக்கொண்டே யிருக்கிறுன். இப்படி நினைவுக்கு வரும் உலக விஷயங்களனைத்தும் மனதோடு

நெருங்கிய சம்பந்தமுடையவைகளாகவே யிருக்கின்றன. இப்படி மனதோடு சம்பந்தப்பட்டிருக்கிற உலகப் பொருள்களை விடுத்து மனதானது ஒரு தனிப்பொருளாக இருக்கவாவது அல்லது ஒன்றை நினைக்கவாவது முடிகிறதில்லை. இது போலவே உலகில் காணப்படுகிறபொருள்களும், மனிதனுடைய நினைப்புக்கும் பார்வைக்கும் வந்து மனதோடு நெருங்கிய சம்பந்தமேற்படுகிறவரையில் அவைகளின் இருப்பைப்பற்றியாவது உருவத்தைப்பற்றியாவது பெயரைப்பற்றியாவது எவ்வித கற்பனையையும் மனிதனால் கொடுக்கமுடிகிறதில்லை.

இவ்விதமாக மனிதனுடைய நினைப்பை விட்டு உலகப் பொருளும் உலகப்பொருளைவிட்டு மனதும் ஒன்றற்கொன்று பிரிவுபடாமல் இருந்துக் கொண்டிருக்கின்றன. நினைப்பைவிட்டுப் பொருளையும் பொருளை விட்டு நினைப்பையும் வேறு வேறாகப் பிரித்துப்பார்க்குங்கால் இவ்விரண்டும் இல்லாமற் போகின்றன. ஆதலின், நினைப்பும்

பொருளும் ஒரே சொரூபமான பொருளென ஊகிக்கப் படுகிறது. என்றாலும், நினைப்பில் தோன்றக் கூடிய எல்லாப் பொருள்களிடத்தும் மனதானது ஒன்று போல நெருங்கிய சம்பந்தம் ஏற்படுத்திக்கொள்ளுகிறதில்லை. மனிதன் எப்போதும் சுகத்தை நாடும் சுபாவம் உள்ளவனா யிருப்பதால் தன் மனதின் சுபாவத்திற்கு உகந்தனவாயும் சுகத்தைக் கொடுப்பன வாயும் இருக்கும் பொருள்கள் தன் மனதில் தோன்றும் பொழுது அவைகளைத்தன் மனதோடு சேர்த்து அவைகளோடு நெருங்கிய சம்பந்த மேற்படுத்திக் கொள்ளுகிறான். தன் மனதிற்கு சுகத்தையுண்டு பண்ண முடியாத சுபாவத்தையுடைய பொருள்கள் மனதினிடத்துத்தோன்றுங்கால் அவைகளைக்கவனியாதும் அவைகளைக் குறித்து ஒன்றும் நினையாமலும் விட்டு விடுகிறான். மனிதனுடைய மனதானது இவ்விதம் சில பொருள்களைப்பற்றும் சிலதைப்பற்றியும் நெடுங்காலம் பழகிப்போயிருக்கின்றது. சுகத்தைக் கொடுக்கக் கூடிய

பொருள்களை மனிதன் தன் மனதினால் பற்றி அ
வைகளோடு எவ்வளவுக்கெவ்வளவு நெருங்கிய
சம்பந்தமேற்படுத்திக்கொண்டு பழகி வருகின்
றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் மனதானது
அப்படிப் பற்றிய பொருளின் சுபாவத்தையும்
சொரூபத்தையும் அடைகிறது. மனிதன் உல
கை எப்படிப்பார்த்துப்பழகி அனுபவித் திருக்
கிறானோ அப்படியே உலகமும் அவனுக்குக் கா
ணப்பட்டு இச்சித்த பலன்களைத்தருகிறது. சித்
திரவேலைக்காரனொருவன் தான்முன் எவ்வித உ
ருவங்களைத் தன் மனதில் பார்த்துப் பழகி வைத்
திருக்கிறானோ அவைகளையே தனக்குப்புறம்பே
உள்ள பலவித வர்னச்சாயங்களின் உதவியால்
உலகில் கற்பிக்கிறான். இவ்விடத்தில் சித்திர
வேலைக்காரனுடைய மனோ பாவமட்டும் வெளி
யே உருவமாகத் தோன்றவில்லை. அன்றியும்,
அவன் உபயோகப்படுத்திய பலவர்னங்களிடத்
தும் அவ்வுருவங்களிருக்கவில்லை. இவ்விரண்டி
னுடைய சேர்க்கையே ஒரு உருவமாக வெளி

யே தோன்றிற்று. இதுபோலவே உலகில் ஒவ்வொருவனும் தன் மனோபாவத்தின் பழக்கப்படியே தனக்கு வேண்டியவாறு உலகப்பொருள்களை எண்ணியும் பார்த்தும் பழகியும் அனுபவித்தும் வருகிறான். இவ்வாறு எண்ணத்தின் பழக்கமே உலகப்பொருளின் இருப்புக்குக்காரணமாயிருக்கிறது. உலகம் எண்ணத்தைவிட்டும், எண்ணம்உலகத்தைவிட்டும் இறண்டும் வேறுவேறான தனிப்பொருள்களாக இல்லை. இறண்டும் ஒரே பொருள்தான். மனிதன் தன் மனப்பழக்கத்துக்குத் தக்கவாறு தனக்குப்புறம்பே பார்த்துப்பழகிய எல்லாப் பொருள்களும் ஒவ்வொரு பெயருடனும் உருவத்துடனுமே அவன் மனதில் பதிவடைந்திருக்கின்றன.

மனிதன் எவ்வளவு தன் மனதைப் பரிசோதித்துப் பார்த்தாலும்பெயரும் உருவமும் அற்ற ஒரு பொருள் எக்காலத்தும் அவன் மனதில் தோன்றப் போகிறதில்லை. மனதில் பதிந்திருக்கின்ற ஒருபொருளின் பெயரையும் உருவ

த்தையும் மனத்தினின்று வேருக எடுத்துவிட்டு மனதைவேருக்கிஅதைஒரு தனிப்பொருளாகப் பார்ப்போமென்ருல் அவ்விடத்து மனதே இல்லாமற் போய்விடுகிறது. மனது இல்லாமற் போனவிடத்து பெயருடனும் உருவத்துடனும் கூடிய உலகப் பொருளும் இல்லாமலே காணப்படுகிறது. இது பற்றித்தான் உலகமும் மனதும் ஒன்றெனக் கூறுவது.

நாம் முதலில் உலகப் பொருளை அறியும் மனிதனை ஆராய்ச்சி செய்யவேண்டு மென்றதின் முடிவு இதுதானு? இல்லை. மனதும் அறிவால் அறியப் பட்டுப் போய்விடுகிறது. அவ்வறிவின் ஆதாரம் பற்றித் தான் மனதும் அதன் சந்நிதானத்தில் அசைந்துகொண்டிருக்கிறது. மனது எப்போதும் ஒரே நிலையிலாவது ஒரே குணத்துடனுவது இருப்பதில்லை. ஒவ்வொரு க்ஷணமும் மாறி மாறி ஒவ்வொன்றைப்பற்றி நினைத்துக் கொண்டேயிருக்கிறது. அன்றியும் சில சமயங்களில் மந்தமாயும்மூடத்தனமாயும், சில சமயங்

களில் உலக காரியங்களைச் சுருசுருப்பாய்ச் செய்வதாயும், சிலசமயங்களில் சாந்தமாயும் சந்தோஷமாயும் இருப்பதை நம் வாழ்நாட்களில் அநுபவமாகக் காண்கிறோம். இப்படி இடைவிடாது மனம் மாறிக்கொண்டேயிருக்கிறது. இயற்கையில் மாறுதலோடுகூடிய பொருள்களனைத்தும் மாறுதலில்லாது அசைவற்று எப்போதும் ஒன்றுபோலிருக்கக்கூடிய ஒரு பொருளை ஆதாரமாகக் கொண்டுதான் நிற்கவேண்டியிருக்கிறது. மாறும் பொருள்கள் ஒவ்வொன்றும் ஒரு பெயருடனும் ஒரு உருவத்துடனுமே இருக்கின்றது. பெயருடனும் உருவத்துடனும் கூடிய பொருள் எப்போதும் ஒரு அளவுக்கு உள்பட்டதாகவே காணப்படும். இப்படி ஒரு அளவுக்குட்பட்டு நாமரூபத்துடன் விளங்கும் பொருள்கள் ஒவ்வொன்றும் தனக்காதாரமாக நாமரூப மேதுமில்லாது அளவுகடந்து அகண்டமாயுள்ள ஒரு பொருளை ஆதாரமாகக்கொண்டுதான் விளங்குகின்றது.

சமுத்திரத்தில் நாமரூபத்துடன் அளவு

பட்டுக் காணக்கூடிய அலைகளும் குமிழிகளும் நுரைகளும் அவ்விரிவான சமுத்திரத்தையே ஆதாரமாகவுடையன. இதுபோலவே மனிதனிடத்து நாமரூப மயமாக அளவுபட்டு விளங்கும் எண்ணங்களனைத்தும் அவைகளுக்கப்பால் நாமரூப அளவு கடந்து அகண்டமாயுள்ள ஒரு பொருளை ஆதாரமாகக்கொண்டுதான் விளங்கிக் கொண்டிருக்கின்றன. இதுதான் மனிதனிடத்துள்ள எல்லாத் தத்துவங்களுக்கும் மேலான தான அறிவெனும் பொருள். இவ்வறிவுக்கு நாமமுமில்லை ரூபமுமில்லை. இது எப்போதும் மனிதனுடைய மனத்தினிடத்து நிகழும் எச் செயலுக்கும் சாக்ஷியாகவுள்ளது. இது குணமும் தொழிலும் அற்றது. பூர்ணமாயும் அகண்டமாயுமிருந்தாலொழிய ஒரு பொருள் இத்தன்மையாக இருக்கமுடியாது. இதுவே தானாகவுள்ள தற்பரம் பொருள்.

இதன் முன்னிலையில்தான் மனிதனுடைய

மனமும் உலகப் பொருள்களும் ஒன்றோடொன்று பிரிக்க முடியாது பின்னவிட்டுக் கலந்து பலவிதமாகக் காணப்படும் ஒரு ஜெகத்து ரூபமாகத் தோன்றியும் இருந்தும் மறைந்துகொண்டும் இருக்கின்றன. மனிதன் இப்பொருளைத் தன்னுள் உணராது மறந்திருக்கிறான். மனிதன் இவ்வறிவே தன் சொரூப நிலையென்று உணராதிருக்கிறவரையில் நாமரூபமயமான உலகம் அவன்மனத்தில்தோன்றி இடைவிடாது இன்பதுன்பங்களை அனுபவித்துக்கொண்டே யிருக்கிறான்.

மனிதன் இவ்வறிவை ஆதாரமாகக்கொண்டு உலகத்தின் இருப்புக்கு ஆதாரமாயுள்ள தன் மனதை எதிரிட்டு அதனிடத்து என்ன நிகழ்கின்றது என்று தன்னை மறக்காமல் பார்க்க ஆரம்பிக்குங்காலத்து நாமரூபமாக விளங்கிய உலகமும் மனதும் முழுதும்இல்லாமல் மறைந்து போய் தன் சொரூப நிலையை அகண்டமாக

உணர்கிறுன். இந்நிலை ஏகமாயுள்ளது, இரண்டற்றது, பூரணமாயுள்ளது, பேதமற்றது, இது மூலமாயுள்ளது, சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்டது. எப்போதும் சத்தியமாயும் அறிவாயும் ஆனந்தமாயும் உள்ள இதுவே சாந்தமயமான தற்பரநிலை.



## உள்ள பொருள்

மனிதன் எப்போதும் சுகத்தில் விருப்பமுடையவனுய் தனக்குப் புறம்பே உள்ள உலகப் பொருள்களிடத்துச் சுகமிருப்பதாக எண்ணி அவைகளை அடையத் தன் வாழ்வில் பெருமுயற்சிகளைச் செய்கிறுன். இவனெடுக்கும் பலவித முயற்சிகளின் ஒவ்வொரு படியிலும் இவனடையும் சங்கடங்களுக்கும் அவதிகளுக்கும் அளவேயில்லை. எத்தனையோ கஷ்டங்களையும் நஷ்டங்களையும் மனோவேதனைகளையும் சகித்துக் கடை-

சியாகத்தான் சுகமனுபவிக்கக்கோரிய பொருளை அடைகிறான். சுகமாகச் சிலகாலம் அதை அனுபவிக்கிறான். பிறகு, சுகந்தருவதாக நினைத்த அப்பொருளையே துக்கத்தைக் கொடுப்பதாகவும் எண்ணி அதை எவ்விதத்தும் விலக்கவேண்டுமென எத்தனிக்கிறான். பிறகு கடைசியில் விட்டுவிடுகிறான். பிறகு மற்றொன்றைப் பற்றுகிறான். அதையும் முன்போலவே உணர்ந்து விட்டுவிடுகிறான். இப்படியே மனிதன் தன் வாழ்வில் உலகப்பொருள்களிடத்துச் சுகமிருப்பதாக எண்ணி அவைகளைப் பற்றிப் பற்றி விடுகிறான். ஒன்றிலும் சுகத்தைக் காணோம்.

ஒருவன் தன் மனைவியினிடத்து முழுப்பற்றையும் வைக்கிறான். ஏதோ ஒரு காரணத்தால் அவள் உயிர் துறக்கிறாள். அச்சமயம் அவன் தான் சுகம் அடையவேண்டுமென வைத்திருந்த நம்பிக்கையெல்லாம் இழந்து இவ்வுலகமே இரு

ளடைந்து தலைகீழாய்க் கவிழ்ந்துவிட்டதாகவும் இவ்வுலக முழுதும் வெறுமையாகப் போய்விட்டதாகவும் தன்னுள் உணர்கிறான். உலகிலுள்ள எப்பொருளும் அவன் மனதை வசீகரிக்கச் சிறிதும் சக்தியற்றதாக அச்சமயம் ஆய்விடுகிறது. ஒன்றையும் நினைக்கிறானில்லை. சிலசமயம் பலதையும்நினைந்து மனம் வருந்துகிறான். இவ்வாறு தன்னறிவை முழுதுமிழந்தவனுப் துன்பமெனும் அலைகள் நிறைந்த சமுத்திரத்தில் தனக்கு யாதொரு பற்றும் உதவியும் அற்று மிதப்பாக என்னுகிறான். மனிதன் ஏன் இப்படிஅறியாமையால் வருந்துகிறான்?

உலகிலுள்ள எப்பொருளும் மாறும் சுபாவத்தோடிருப்பதால் மனிதன் அதை எப்போதும் ஒன்றுபோல நிலைத்திருக்க ஏன் எண்ணுகிறான்? உலக சுகத்தை எப்போதும் ஒன்றுபோல நிலைத்திருக்கவேண்டுமென எண்ணுவது

ஓடுகிற மேகத்தை நிறுத்தப் பார்ப்பதுபோலல்லவா? என்றைக்கிருந்தாலும் ஒரு நாள் இறப்பதென்பது நிக்ஷயமாக வேற்பட்டிருக்கும் ஒரு உலகப் பொருளிடத்து நாம் எப்படி ஒன்றுபோல் எக்காலத்தும் மாருததன்மையைப் பார்க்க முடியும்? இல்லை. "சத்தியத்தையறிந்து அனுபவிக்கிறவனே உலக துன்பங்களிலிருந்து முழுதும் விலகினவனுய்ச் சுகமாக வாழ்கிருன்".

எப்போதும் மாறுதலில்லாது ஒன்றுபோலிருக்கும் ஒரு பொருளே எக்காலத்தும் உள்ள பொருளாகும். இப்பொருள் எது? அது எத்தன்மை வாய்ந்தது? அதை எவ்விதத்தாலறிந்து அனுபவிப்பது? எனும் கேள்விகள் மனிதஜாதி ஏற்பட்ட காலமுதல் இந்நிமஷம்வரை மனிதன் துக்கமுறும்போதெல்லாம் அவன் மனத்தில் உண்டாய்க்கொண்டிருக்கின்றன. பிறகு

சொற்ப நேரத்துக்குள் அதனை மறந்துவிடுகி ருன். இப்படியே மனிதர்களுள் பெரும்பாலு மிருக்கிருர்கள். ஆனுல் விவேகியாக இருப்பவன் மட்டும் தன்னுள் நிகழ்ந்த இவ்வித கேள்விகளு க்கு விடை கண்டுபிடித்து சாந்தமடைய வேண் டுமெனும் ஆவலுற்ற ஒரு பெரியஎண்ணத்தால் தூண்டப்பெற்றவனய்த் தன்வாழ்வின் ஒவ்வொ ரு நிமிஷமும் இடைவிடாது முடிவையடைகிற வரையில் ஆராய்ச்சி செய்கிருன். தன்னைச் சுற் றிலுமுள்ள எப்பொருளும், தன்னுல் காணப் படுகிற சூரிய சந்திராதி அண்டங்களும் மற்றும் நம் மனதால் எண்ணக்கூடிய எல்லாம் மாறுவ தாகவும் அழிவதாகவும் காணப்படுகின்றன. எல்லாம் காலமெனும் கள்ள வயதால் சிறிது சிறிதாகக் கரைக்கப்பெற்று முடிவில் ஒன்று மில்லாததுபோல் அழிந்து நாசமாகின்றன. அக்காலமும் முடிவில் இல்லாது அழிகின்றது.

எப்போதும் உள்ள பொருளை யோசிக்கின் அதன்முன்னிலையில் இவையனைத்தும் எவ்வளவு சிறியனவாகத் தோன்றுகின்றன? ஆனால் அப்படி எப்போதும் உள்ள பெரிய பொருளெது? அது எத்தன்மை வாய்ந்தது? அதன் உண்மை நிலை யென்னை? அந்நிலை எங்கேயுள்ளது?

எப்போதும் மாறாது ஒன்றுபோல் உள்ள பொருள் எனும் இந்நிலை காலபேதங்களுக்கு அப்பாற்பட்டது. நித்தியமானது. எப்போதும் சத்தியமாயுள்ளது. இதுவே மனிதனுடைய சொரூப நிலை. இந்நிலை எப்போதும் மாறுதலடையாதது. இந்நிலையின் முன்னேதான் மற்றய உலக நிலைகளும் மனிதனுடைய மனோசரீராதி நிலைகளும் மாறிக்கொண்டே யிருக்கின்றன. இந்நிலையை மனிதன் அறிவின்மையால் மறந்திருக்கிறான். இந்நிலையை மனிதன் அறிந்தாலும் அறி

யாவிட்டாலும் அவனிடத்து நிகழும் எல்லாக் காரியங்களிலும் எந்நிலையிலும் அது 'நான்' எனும் போதத்துடன் இடைவிடாது முன்னின்று பிரகாசிக்கக் காண்கிறோம். கடவுளெனும் இத்தற்பர நிலையை மனிதன் அறிந்தாலும் அறியாவிட்டாலும் அதன் இருப்பை நம்பினாலும் நம்பாவிட்டாலும், 'நான்' இருக்கிறேன் என்ற தன் இருப்பின் நிலையை மட்டும் ஒருவனும் நம்பாமலாவது அறியாமலாமது அனுபவிக்காமலாவது இருந்துவிடவில்லை. ஒவ்வொருவனும் 'நான் இருக்கிறேன்' எனும் இந்நிலையினிடத்துக் கொஞ்சமும் சந்தேகிக்காமல் நிக்ஷபமாக அதை நம்பியும் அறிந்தும் அனுபவித்துமிருக்கிறான். இதை மனிதன் தன்னுள்ளே உணராவிட்டால் தனக்குப் புறம்பே எக்காலத்தும் எவ்விதத்தும் அறியவாவது அனுபவிக்கவாவது போகிறதில்லை. இதைத்தனக்குள்ளே தேடி அறியாது புறம்பே தேடுகிற ஒருவன், ஒரு நகரத்திற்கு அரசனை

விருக்கும் ஒருவன் அந்நகரத்து அரசன் யார் அவன் எங்கே இருக்கிறான் என்று மூடத்தன மாய்த் தேடிய அவ்வரசனைப் போலவே கருதப் படுவான்.

மனிதன் செய்யும் எத்தொழிலிலும் அவனுடையும் எந்நிலையிலும் 'நான்' 'நான்' என எதற்கும் முன்னின்று விளங்கும் அவனுடைய தற்போதமானது எக்காலத்தும் மாறாதுள்ள பரநிலையினின்று சிறிதும் வேறுபடாதது. சுருக்கிச் சொல்லின் அந்த 'நான்' என்பதே பரமாகும். இதுவே ஆரியர்களுடைய வேதத்தில் மதத்தின் முடிவான தத்துவமாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. மனிதன் முதலில் தன்னை நம்பி பிறகு கடவுளை நம்பவேண்டும். மனிதன் அடையும் உதவியும் அடைக்கலமும் தனக்குப்புறம்பே இருந்து வருவனவல்ல. தன்னுள்ளேயே அடையவேண்டும். கடவுளைத் தனக்கு வெளியே இருப்பதாக நினைத்து பிரார்த்தித்த எவரும் இது

வரை அக்கடவுளிடமிருந்து எவ்வித பதிலேயும் அவர்கள் செய்த பிரார்த்தனையின்பலனை அடைந்ததாகக் காணேம். அப்படி ஏதேனும் இருப்பதாக எங்கேனும் கூறியிருக்குமானல் அது அவர்கள் கொண்ட மனத்தோற்றமே யன்றி வேறென்றுமில்லே.

இக்கொள்கை அவைத மதக் கருத்துக்கு முற்றும் மாறனதேயாயினும் இதுவே முற்றிலும்அனுபவத்திற்கு இசைந்தது. இக்கொள்கையையே நாம், பிரத்தியக்ஷ அனுபவப் பொருளினிடத்திருந்தே மேல் செல்ல வேண்டுமென முதன் முதலிற் கூறியது. 'நான்' எனும் போதமானதுஎல்லோருக்கும் பிரத்தியக்ஷமே. இதனுடைய இருப்பானது எவற்ருலும் மறைக்கப்படவில்லே. அது யாதொரு மறைவும் இரகசியமுமின்றிஎப்போதும் உள்ளபடியே விளங்கிக்கொண்டிருக்கிறது. இதற்குப் போக்கு வரத்து வளர்ச்சி குறைவு தோன்றல் மறைதல் எனும் எவ்வித விகாரமும் கிடையாது.

" நான் இருக்கிறேன் " என்கிற நிகழ்கால உணர்வே சென்றகாலத்தில் இருந்தேன் என்பதையும் இனி வருங்காலத்திலும் இருப்பேன் என்பதையும் உறுதிப்படுத்தி விளக்குகின்றது. இப்போது இருந்துகொண்டிருக்கிற 'நான்' என்பது இதற்கு முந்தியும் இருந்திருக்கவேண்டும். இதற்குமுந்தி இருந்திராவிட்டால் இப்போதிருக்கமுடியாது. ஆதலின் இப்போதிருக்கும் 'நான்' என்பது இனி வருங்காலத்திலும் இருக்குமென்பது உருதி. அன்றியும் காலத்தினிடத்து இப்போது நாம் விவகரிக்கிறதுபோல சென்றகால நிகழ்கால வருங்காலங்களாகிய எவ்வித வேற்றுமையுங் கிடையாது. அது எப்போதும் தொடர்ச்சியாகவுள்ள ஒரே வஸ்துதான். அது மனிதனிடத்து ஒன்றன்பின் ஒன்றாக உண்டாகும் எண்ணத்தின் தொடர்ச்சியால் மூன்று காலங்களாகப் பேதப்பட்டுக் காண்கிறது. மனிதன் இப்போதிருக்கிற நிலைமையில்

அங்கிலமைக்கு முன் பின் என்று ஏற்படுத்திக் கொண்டிருக்கிற எண்ணத்தின் தொடர்ச்சிபேதமே முக்காலமெனப்படுகிறது. இப்படி எண்ணத்தின் காரியமாத்திரமாகப் பொய்யாக வேற்பட்டிருக்கிற மூன்று காலங்களிலும் 'நான்' என்பது மாருது மபங்காது தொடர்ச்சியாக அது சுயம் நான்எனவே விளங்கிக்கொண்டிருக்கிறது.

"நான்" குழந்தையாயிருந்தேன், நான் குமாரனுயிருந்தேன், நான் வாலிபனுயிருந்தேன் நான் கிழவனுயிருக்கிறேன் என்ற தேகத்தின் வளர்ச்சி மாறுதலிலும், நான் தேக ஆரோக்கியத்துடனிருந்தேன், தேக அசௌக்கியத்துடனிருந்தேன் என்ற சரீர சுக நிலேயிலும், நான் துக்கமுள்ளவனுயிருந்தேன், நான் சந்தோஷமுள்ளவனுயிருந்தேன் என்ற மனே மாறுதல் நிலேயிலும், நான் எனும் போதம்மட்டும் சிறிதும் மாருத இவ்வெல்லா நிலைமைகளிலும் தொடர்ச்

சியாகவே இருந்துகொண்டிருக்கிறது. குழந்தை யாகவிருந்த தேகமும் அப்போதிருந்த மனமும் குமாரனாயிருந்த தேகமும் அப்போதிருந்த மன மும் வாலிபனாயிருந்த தேகமும் அதன் மனமும் அப்படியே வயோதிகனாக யிருக்கிறகாலத்துள்ள தேகமும் மனமும் ஆகிய எல்லாம் மாறுதலடை ந்த காலத்தும் நான் என்பது உண்மையில் இவைகளைத் தானாக அபிமானித்திருந்தும் அது இவைகளுடைய எவ்வித மாறுதல்களுக்கும் அப்பால் நின்று தான் சிறிதும் மாறாத சுயம் நான் எனவே எக்காலத்தும் ஒன்றுபோல் விள ங்கிக்கொண்டிருக்கிறது.

இப்படி எக்காலத்தும் மாறாத ஸ்திர நிலை பெற்றிருக்கும் இத்தத்துவம் சுயமாகவேயுள் ளது. இதற்கு ஆதாரமாக யாதொரு பொரு ளும் கிடையாது. இதுவே தோன்றி யழியும் மற்றெல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாயுள் ளது. இது உற்பத்தி நாசமற்றது. இப்பொருள்

எங்கும் பூரணமாகவும் நிறைவாகவும் இரண்டற்றதாகவும் இருத்தல்பற்றித்தான் முக்காலத்தும் மாறாது நித்தியமாக விளங்குகிறது. நித்தியமாயும் பூரணமாயுமுள்ள இப்பொருளுக்கே அளவுகடந்த அகண்டத்வம் ஸ்தாபிக்கப்படுகிறது. அளவுபட்டுத் தோன்று மெப்பொருளிலும் இதுவே நிறைந்திருக்கிறது. இந்நிலையே மனிதனுடைய உண்மை நிலை. அவனிடத்துக் காணும் மற்றய ஸ்தூல சூக்ஷம பேத நிலைகளெல்லாம் உண்மையாகத் தோன்றினும் அப்படியிலேயே உள்ளவையல்ல. எல்லாம் பொய்யே.

இந்நிலையை மனிதன் தன்னுள் உணர்ந்திருந்தாலும் உணராவிட்டாலும் அவன் வார்த்தையாடுமிடங்களிலெல்லாம் தன்னுணர்வில்லாமலே, தேகம் தான், மனது தான், அறிவுதான், இது தான், அது தான், அவன் தான், அவள் தான் சந்திரன் தான், சூரியன் தான், சிவன் தான், விஷ்ணு தான், குருதான், உலகுதான், நரகம்தான்,

சுவர்க்கம்தான் மோக்ஷம்தான் என, ஒவ்வொன்றையும் தன்னுள் அடக்கி எல்லாப் பொருள்களிடத்தும் தன் நிறைவையே சுட்டுகிறுன். இப்படிச் சர்வமும் தானே தன் மயமாக விளங்கும் தன் சொரூப நிலையை மனிதன் மறந்து தான் அபிமானித்திருக்கும் தேகாதிகளோடு சம்மந்தப்பட்டு அகண்ட சொரூபமான தன்னை அளவுபடுத்தி வீணே பிரமித்துக்கொண்டிருக்கிறுன்.

மனிதனுடைய உண்மை நிலை தேகமற்றது. அகண்டமான அந்நிலை ஒரு அளவுபட்ட தேகத்தினுள் அடங்குமா? அகண்டாகாரமான அச்சமுத்திரத்தில் குமிழிகளைப்போல் எல்லா தேகங்களும் தோன்றுகின்றன. இந்நிலையே உண்மையான தன்னிலை என்றுணர்ந்த மனிதனுக்கு ஜனன மரண பயமேது? இவ்வகண்டாகாரத்சொரூப நிலைக்கு ஜனனமேது மரணமேது? போக்குவரத்தேது? ஏகமான இதற்கு பந்த

மேது? துக்கமேது பயமேது? ஏக உணர்வடைந்த இந்நிலையில் யார் யாரை வெறுப்பது? யார் யாரை விரும்புவது? இவ்வித த்வந்தத் தன்மைகளேதும் அவ்விடத்திலில்லை. எல்லாம் ஏகமே. பலவென்பது கொஞ்சமுமில்லை. இந்நிலை எதினாலும் பாதிக்கப்படாதது. இந்த ஜெகத்தெல்லாம் அழிகிற காலத்தும் நீ அழிகிறதில்லை. இந்நிலையே உன் நிலை. மற்றய பலவென்பதெல்லாம் மனோ மாத்திரமான வீண் வாதமே. உன்னிலை மனதுக்கு அப்பார்ப்பட்டது. அது மனதால் விவகரிக்கப்படுவதன்று. நீயே எல்லாவற்றிலுமிருக்கின்றாய். எல்லாம் உன்னிடத்தில் இருக்கின்றன. இதுவே உன் சொரூபமான பரநிலை. 'நீ அதுவாக இருக்கின்றாய்.'

